POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# சிங்கள அரசுக்காக திமுக செய்த உளவுவேலை

## திடுக்கிடும் தகவல் அம்பலம்

Regd. No. TN - MS [C] 244 Phone: 420212 பக்கம் 4 விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10 சென்னை 11-6-1986 புதன் : வெளியூர் 12-6-1986 வியாழன் இதழ் 229

## ஈழத்தமிழர் இயக்கம் பற்றி இலங்கை ராணுவத்துக்கு தகவல்

**சென்னை, ஜூன் 11- இலங்கை அரசுக்கு ஆதரவாக உளவு வேலையில் தி. மு. க. ஈடுபட்டுள்ளது என்ற திடுக்கிடும் தகவல் வெளியாகியுள்ளது.**

சென்னை, ஜூன் 11— சிங்கள ரகசிய போலீசாருடன் இணைந்து தமிழகத்தில் பல சதி வேலைகளில் ஈடுபட்டும் விடுதலைப் புலிகள் பற்றி இலங்கைக்கு ரகசிய தகவல் தெரிவித்தும் வந்த கும்பலில் கருணாநிதி கட்சிக்காரருக்கு தொடர்பு உள்ளதுஎன்ற திடுக்கிடும் தகவல் கிடைத்துள்ளது.

தமிழகத்தில் பல சதி வேலைகளில் சிங்கள ரகசிய போலீசுடன் இணைந்து ஒரு கும்பல் செயல்பட்டு வந்ததும் தமிழகத்திலுள்ள ஈழப் போராளிகள் பற்றி இலங்கை அரசுக்கு தகவல் தெரிவித்து வந்ததுமான கும்பல் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

இந்தக் கும்பலுடன் கருணாநிதி கட்சியை சேர்ந்த மணவைத் தம்பியும் தொடர்பு கொண்டுள்ளார் என்பது தெரிய வந்துள்ளது. இவருக்கு பெர்னாந்து என்ற பெயரும் உண்டாம். இலங்கை குடிபெயர்ந்தோர் சங்கதலைவர் என்ற பதவியை வைத்துஇலங்கையிலிருந்து வரும் தமிழர்களுடனும் மற்றவர்களுடனும் தொடர்பு கொண்டு வந்தாராம். தமிழகத்தில் விடுதலை புலிகள் நடவடிக்கை, ஈழத் தமிழர்களுக்கு இங்குள்ள தமிழர்கள் ஆதரவு ஆகியவைபற்றி ரகசிய தகவல்களையும் அனுப்பி வந்ததாக தெரிகிறது.

### சதிச்செயல்

தமிழகத்தில் குழப்பம் விளைவிக்கும் சதி செயல் மதுரையில் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்ற போது உருவானதாம்.

சென்னை எழும்பூர் பகுதியிலுள்ள ஒரு ஓட்டலில் உலக தமிழ் மாநாட்டுக்கு வந்தவர்கள் சிலர் தங்கினார்களாம். அப்போது சிங்கள உளவாளிகள் சிலரும் வந்தனராம். அப்போது தான் இந்த சதி உருவானதாக தெரிகிறது. இந்தச் சதி கும்பலுடன் ஏர்லங்கா நிறுவனதுக்கு டிக்கெட்பதிவுசெய்துதரும் ஒரு சுற்றுலா ஏஜன்சி உரிமையாளரும் சம்பந்தப்பட்டிருப்பதாக கூறப்படுகிறது.

சதிசெயல்களில்ஈடுபட்டவர்கள் சிலரை போலீசார் பிடித்துள்ளனர். மேலும் சிலரை தேடிவருகின்றனர். சென்னையில் சில பிரமுகர்களின் பாஸ்போர்ட் மற்ற நடவடிக்கைகளையும் போலீசார் கண்காணித்து வருவதாக தெரிகிறது மேலும் பலர் சிக்குவார்கள் எனத் தெரிகிறது.

இங்குள்ள ஈழ விடுதலை இயக்கம்பற்றி இலங்கைஅரசுக்கு தகவல் கொடுப்பது உள்ளிட்ட சதி வேலைகளில் ஈடுபட்டதாக கைது செய்யப்பட்டவகு மணவைத்தம்பி இவருக்ர் ஆதரவாகத் தான் அவர் சார்ந்துள்ள தி,மு,க.ஏடான முரசொலி மணவைத் தம்பியை போலீசார் பிடித்துச் சென்று விட்டனர் என்று செய்தி போட்டது.

### திடுக்கிடும் தகவல் வெளியாகும்

சென்னை. ஜூன 11— தமிழகத்தில் சதி வேலைகளில் ஈடுபட்டதாக உளவாளி கும்பல் ஒன்று கைது செய்யப்பட்டிருப்பது தெரிந்ததே.

இந்தக் கும்பலில் எத்தனை பேர் சிக்கினார்கள்" அவர்களுக்கு யார்உடந்தை என்னென்ன குற்றம் செய்தார்கள் என்பது போன்ற விவரங்கள் இன்னும் மூன்று தினங்களில் வெளியிடப்படுமென போலீஸ் உயரதிகாரி இன்று தெரிவித்தார்.

### மதுவிலக்கு அமல்பிரிவு டி ஐ ஜி யாக அலெக்சாண்டர் பதவி ஏற்றார்

சென்னை, ஜூன் 11— மதுவிலக்கு அமல் பிரிவு டி.ஐ’ஜி. யாக நியமிக்கப்பட்டுள்ள அலெக்சாண்டர் இன்று காலை 10 மணிக்கு பொறுப்பை ஏற்றார்.

## 26,268 பேருக்கு நிதி உதவி: புரட்சித்தலைவர் அவசர உத்தரவு

திருச்சி. ஜூன் 11- மேலும் 26,268 முதியோர்க்கு ஓய்வூதியம் கொடுக்க புரட்சித் தலைவர்அரசுஆணை பிறப்பித்துள்ளது.

ஆதரவற்ற முதியவர்கள், உடல் ஊனமுற்றவர்கள், ஆதரவற்ற விதவைகள், நிராதரவான வயது முதிர்ந்த விவசாயத் தொழிலாளர்கள் ஆகியோருக்கு புரட்சித்தலைவர் அரசு உதவித்தொகை வழங்கி வருகிறது அல்லவா?

பலர் தங்களுக்கும் உதவிப்பணம் வேண்டும் என்று அரசைக் கேட்டு வந்தனர்.

இதைத் தொடர்ந்து மேலும்26,268பேருக்கு உதவித்தொகைவழங்க புரட்சித்தலைவர் அரசு உத்தரவு பிறப்பித்துள்ளது.

இந்த 26,268 பேர்களில் ஆதரவற்ற முதியோர், உடல் ஊனமுற்றவர்கள், விதவைகள், விவசாயத் தொழிலாளர்கள் ஆகியோர் அடங்குவர்.

### கூடுதல் செலவு

இதனால் அரசுக்கு ஆண்டுதோறும் ரூபாய் 2 கோடியே 24 லட்சம் கூடுதலாக செலவாகும்.

1-4-86 முதல் இவர்களுக்குஉதவித்தொகை வழங்கப்படும்.

சம்பந்தப்பட்ட ரெவின்யூ டிவிஷனல் அதிகாரிகளிடம் அனுமதி பெற்று அவர்கள் ஓய்வூதியம் பெறலாம்.

### விரைவில் மத்திய அமைச்சரவை மாற்றம்?

புதுடெல்லி, ஜூன் 11- மத்திய அமைச்சரவை இந்த மாதத்தில் மாற்றம் செய்யப்படும் என எதிர் பார்க்கப்படுகிறது.

அரியானா முன்னாள் முதல்வர் பஜன்லால், மத்திய அமைச்சராவார் எனக் கூறப்படுகிறது.

கடந்த திங்கட்கிழமையன்றே பஜன்லால் பதவி ஏற்பதாக இருந்ததாம். ஆனால் திடீரென பஜன்லாலுக்கு உடல் நலக்குறைவு ஏற்பட்டதால் பதவி ஏற்பு ஒத்தி வைக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது.

பஜன்லாலோடு மேலும் ஒரிருவர் அமைச்சராக நியமிக்கப்படலாம் எனவும் கூறப்படுகிறது

இந்த அமைச்சரவை மாற்றம் இந்தவாரம் நடைபெறும் எனத் தெரிகிறது.

### இலங்கையில் குண்டு வெடித்து 70பேர் சாவு

கொழும்பு ஜூன் 11— இலங்கையில்இன்று நடந்த பல குண்டு வெடிப்பு சம்பவங்களில் 70-க்கும் மேற்பட்டோர் இறந்துள்ளனர்.

இந்தச் சம்பவம் திரிகோணமலைப் பகுதியில் நடந்துள்ளது.

### வரிச்சலுகை வி. பி. சிங் அறிவிப்பு

புதுடெல்லி. ஜூன் 11— எக்சைஸ், மற்றும் கஸ்டமஸ், வரிகளில் 100 கோடிக்கு வரி சலுகைகளைமத்தியநிதி அமைச்சர் வி.பி. சிங் அறிவித்துள்ளார்

எலெக்ட்ராளிக் பொருட்கள் மீதான வரிகளில் சலுகை அளிக்கப்பட்டுள்ளது.

45 வகையான மருத்துவ கருவிகள் மீதான எக்சைஸ் மற்றும் கஸ்டம்ஸ்வரிகளில் சலுகை வழங்கப்பட்டுள்ளது

100 சதவீதமாக இருந்த மின்னணு மூலப்பொருட்கள் சுங்கவரி 30 சதவீதமாக குறைக்கப்பட்டுள்ளது. உதிரி பாகங்களுக்கு 140 சதவீதமாக இருந்த வரி 45 சதவீதமாக குறைக்கப்பட்டுள்ளது,

இவ்வாறு மத்திய அமைச்சர் வி. பி. சிங் அறிவித்தார்.

### பனைமரத்தில் லாரி மோதல்: இருவர் மரணம்

சென்னை, ஜூன் 11— பனைமரத்தின் மீது லாரி ஒன்று மோதியதால் இருவர் இறந்துள்ளனர்.

வியாசர்பாடியைச் சேர்ந்தவர் ராஜேந்திரன் (வயது 22) இவர் லாரி உரிமையாளர் இவர் தனது நண்பர்களுடன் திருத்தணி சென்றபோது மூலக்கடை அருகே லாரி தறிகெட்டுஓடி பனைமரத்தில் மோதியது இதில் ராஜேந்திரன் அந்த இடத்திலேயே இறந்தார். விஜயகுமார் என்பவர் மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்லும் வழியில் இறந்தார்.

மற்ற 6 பேர் பொது மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகின்றனர்.

இந்த சம்பவம் குறித்து திருவள்ளூர்இன்ஸ்பெக்டர் புஷ்பராஜ் விசாரித்துவருகிறார்.

## ஓசூரில் ரூ. 40 கோடியில் கடிகார தொழிற்சாலை

ஆலங்குளம், ஜூன்11- ஓசூரில் 40 கோடி செலவில கடிகாரத் தொழிற்சாலை அமைக்கப்பட உள்ளதாக, ‘டிட்கோ’ தலைவர் சுலோசனா சம்பத் தெரிவித்துள்ளார்.

ஆலங்குளத்தில் நிருபர்களிடம் பேசுகையில் சுலோசனா சம்பத்கூறியதாவது:-

தமிழ்நாடு தொழில் முதலீட்டுக்கழகசார்பில்.வெளிநாட்டு நிறுவனங்கள்ஒத்துழைப்போடு தமிழகத்தில் பல்வேறு தொழிற் சாலைகள் அமைக்கப்பட உள்ளன.

### கட்டுமானப் பணிகள்

ஓசூரில் 40கோடி ரூபாய் செலவில் கடிகாரத் தொழிற்சாலை ஒன்று அமைக்கப்பட உள்ளது.

இந்தத் தொழிற்சாலையின் கட்டுமானப் பணிகள் நடைபெற்று வருகிறது.

குளிர்பானங்களுக்குத் தேவையான "எசனஸ்" தயாரிக்க தர்மபுரி மாவட்டத்தில் ஒரு தொழிற்சாலை அமைக்கப்படும்

இந்தத் தொழிற்சாலைக்கு 5 கோடியே 50 லட்ச ரூபாய் செலவர்கு மென மதிப்பிடப்பட்டுள்ளது,

இத் தொழிற்சாலைமூலம் 300 லிருந்து 500 தொழிலாளர்கள் வேலை வாய்ப்பு பெறுவார்கள்.

8 கோடி ரூபாயில், ஆஸ்துமா நோய்க்கான மருந்து தயாரிப்புத் தொழிற்சாலை ஒன்றும் அமைக்கப்பட உள்ளது.

இத் தொழிற் சாலை அமைக்கப்பட உள்ள இடம் பின்னர் அறிவிக்கப்படும்.

இவ்வாறு சுலோசனா சம்பத் கூறினார்.

## மாநிலங்களவை தேர்தல் 18ந்தேதிவரை மனுத்தாக்கல்

சென்னை, ஜூன் 11— மாநிலங்களவைத் தேர்தலுக்காக 18-ந் தேதி வரை வேட்புமனு தாக்கல் செய்யலாம்,

மாநிலங்களவைக்குதமிழ்நாட்டில் இருந்து ஆறு உறுப்பினர்களை தேர்ந்தெடுக்க வேட்புமனு தாக்கல் இன்று துவங்கியது.

இந்தத்தேர்தலுக்கு தேர்தல் அதிகாரியாக சட்டசபைச் செயலாளர். சி.கு. ராமசாமி இருக்கிறார்.

அவர் வெளியிட்டுள்ள ஓர் அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

வேட்பு மனுக்களை பேரவைச் செயலகத்தில் காலை 11 மணி முதல் மாலை 3 மணிக்குள்ளாக 18ம்தேதி வரை தாக்கல் செய்யலாம். 14-ம் தேதி விடுமுறையாக இருந்தாலும் வேட்பு மனு தாக்கல் செய்யலாம். இந்த நாட்களில் வேட்பு மனு படிவங்களும் கிடைக்கும்

வேட்பு மனுக்கள் 19-ம் தேதி காலை 11 மணிக்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படும்வேட்புமனுவாபஸ் 21ந்தேதிமாலைக்குள் பெறப்படவேண்டும், போட்டியிருந்தால் 28ந்தேதிகாலை 10முதல் பிற்பகல் 2 மணி வரை வாக்குப்பதிவு நடைபெறும் என்று தேர்தல் அதிகாரி சி. கு. ராமசாமி தெரிவித்துள்ளார்.

இன்று பிற்பகல் வரை யாரும் மனுத்தாக்கல் செய்யவில்லை.

தமிழக சட்ட சபையில் தற்போதைய கட்சி நிலவரம் வருமாறு:

| | |
|---|---|
| கழகம் | 130 |
| இ. காங்கிரஸ் | 62 |
| தி.மு.க. | 22 |
| மார்க்சிஸ்ட் | 5 |
| ஜனதா | 3 |
| கா.கா.தே.கா. | 2 |
| இந்தியகம்யூனிஸ்ட் | 2 |
| பார்வர்ட்பிளாக் | 2 |
| முஸ்லிம் லீக் | 2 |
| குடியரசுக்கட்சி | 1 |
| சுயேச்சை | 1 |
| காலியிடங்கள் | 2 |

### கழக ஆட்சிக்கு எதிராக வன்முறை வெறியாட்டத்தை தூண்டிவிடுவதா?

## தி. மு. க. பிரமுகர் கழகத்தில் சேர்ந்தார்

### ஈழத்தமிழர் பிரச்சினையில் தி. மு. க.வின் இரட்டை வேடப் போக்கிற்கு கண்டனம்

சென்னை, ஜூன் 11— கழக ஆட்சிக்கு எதிராக வன்முறைகளை தூண்டிவிடும் கருணாநிதியின் போக்கைக் கண்டிக்கும் வகையில் தி. மு. க. பிரமுகரும் அகஸ்தீஸ்வரம் ஒன்றிய துணைப் பெருந்தலைவருமான அ.பெருமாள்பிள்ளை முதல்வர் புரட்சித்தலைவர் முன்பு கழகத்தில் இணைந்தார்.

### தி. மு. க. செயலாளர்

கன்னியாகுமரி தொகுயைச் சேர்ந்த அகஸ்தீஸ்வரம் தி.மு.க. ஒன்றிய துணைப் பெருந்தலைவரும், கொட்டாரம் பேரூராட்சி மன்றத் தலைவரும். கொட்டாரம்கிளைதி.மு.க செயலாளருமான அ. பெருமாள் பிள்ளை தி. மு. க விலிருந்து விலகி முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்கள் முன்னிலையில் இன்று காலை கழகத்தில் இணைந்தார்,

அப்பொழுது கன்னியாகுமரி மாவட்ட கழகச் செயலாளர் சா. கி. நாகப்பன் கன்னியாகுமரி தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் கோ. பெருமாள்பிள்ளை மாவட்ட விவசாய சங்கத்தலைவர் அழகை சிதம்பரம்மாவட்ட தொழிற்சங்கத் தலைவர் கோபிநாத். நாஞ்சில் வின்சென்ட் ஆகியோர் உடனிருந்தனர்.

தலைமைக் கழகத்தில் பொதுச்செயலாளர் இராகவானந்தம் பொருளாளர் மாதவன் ஆகியோரை சந்தித்து பெருமாள்பிள்ளை கைத்தறி ஆடை அணிவித்தார்.

கழகத்தில் இணைந்த அ. பெருமாள் பிள்ளை விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்திருப்ப தாவது:—

அகஸ்தீஸ்வரம் ஒன்றிய துணைப் பெருந் தலைவராகவும், கொட்டாரம் பேரூராட்சித் தலைவராகவும் இருக்கும் நான், கொட்டாரம் தி.மு.க, கிளைச் செயலாளராகவும் பணியாற்றி வந்தேன்.

### தமிழ் சமுதாயம் வெறுக்கும்நிலை

அண்மை காலமாக தி.மு.க, தலைவர் கருணாநிதியின் போக்கு தமிழ்ச் சமுதாயம் வெறுக்கும் அளவில் உள்ளது. பதவிசுகம் தேடுவதையும் புரட்சித் தலைவரின் ஆட்சிக்கு எதிராக வன்முறைகளை தூண்டிவிடுவதையும் தவிர எந்த லட்சியமும் அவருக்கு இல்லை. ஈழத் தமிழர்களின் பிரச்சினையை மூலதனமாக வைத்து அரசியல் ஆதாயம் தேட முனையும் அவரது தவறான போக்கினால், ஈழ விடுதலை இயக்கங்களிடையே பிரிவினை உருவாக காரணமாக இருந்து வருகிறார். தி.மு.க வை சுயநலத்திற்காக பயன்படுத்துகிறார். எனவே, கருணாநிதி தலைமையிலிருந்து விடுவிதுக்கொள்கிறேன்.

மத்திய அரசை வலியுறுத்தி அமைதியான முறையில் ஈழத் தமிழர்களை காப்பாற்ற முதல்வர் எடுக்கின்ற நல்ல முயற்சிகளுக்காக பெருமிதப்படுகிறேன் தமிழக மக்களுக்காக தன்னை அர்ப்பணித்து நல்வாழ்வு திட்டங்களை செயல்படுததுகின்ற தங்கள் தலைமையை விரும்பி ஏற்று கழகத்தில் இன்று முதல் என்னைஇணைத்துக் கொள்ள தங்கள் முன்னிலையில் கழகத்தில் இணைகிறேன்.

இவ்வாறு அ.பெருமாள் பிள்ளை தெரிவித்துள்ளார்

### எல்லையில் இந்தியாவுடன் பாகிஸ்தான் மோதல்

ஜம்மு, ஜூன். 11— எல்லைப் பகுதியான பூஞ்ச் பகுதியில் இந்திய துருப்புகளுக்கும். பாகிஸ்தான் துருப்புகளுக்குமிடையே மோதல் நடந்துள்ளது.

இந்திய பகுதியில் இருக்கும் லாங்கூர் மலைப் பகுதியில பாகிஸ்தானியர் குழி தோண்ட முயற்சித்ததை அடுத்து இந்த தகராறு மூண்டது.

இதில் எவருக்கும் காயமில்லை.



**வளர்ச்சி**

வளர்ச்சி என்பது படிப்படியாக இருந்தால்தான் முடிவில் நல்ல பயனைத் தரும்.

—பேரறிஞர் அண்ணா

**ஒற்றுமை**

வேற்றுமைகளை மறந்து ஒற்றுமையுடன் வாழ்ந்தால் நல்ல பலனைப் பெறலாம்.

—தந்தை பெரியார்

## பட்டிமன்றம்

சென்னை, ஜூன் 11— அண்ணா நகர் பகுதி கழகம் சார்பில் பரபரப்பான பட்டிமன்றம்இன்று (11—ந் தேதி) மாலை 7 மணி அளவில் கோதண்டராமன் தலைமையில் அமைந்தகரை பெருமாள் கோயில் தெருவில் நடைபெறுகிறது.

இப்பட்டி மன்றத்தை திருப்பூர் மணிமாறன் துவக்கி வைக்கிறார். நாஞ்சில் மணிமாறனை நடுவராகக் கொண்ட இந்த பட்டி மன்றத்தில் கோடம்பாக்கம் குமார் கவிஞர் மணிமொழி, சுகுமார் பாபு, என். வி. என். செல்வம். பாண்டியன் ராஜலட்சுமி கோலப்பா. வெங்கடேசன், குப்புசாமி மற்றும் பலர் கலந்துகொள்கின்றனர்,

# சென்னையில் ரிசர்வ் வங்கிக்கு வந்த கள்ள நோட்டுகள்

சென்னை, ஜூன் 11- சென்னை ரிசர்வ் வங்கிக்கு வந்த ரூபாய் நோட்டு கட்டுகளில் கள்ள நோட்டுகள் இருந்தன

சென்னை ரிசர்வ் வங்கியில் 2 வங்கிகள் பணம் செலுத்தின. ரயில்வே இலாகாவும் பணம் கொண்டு வந்து செலுத்தியது.

அந்த ரூபாய் நோட்டுகளை ரிசர்வ் வங்கி அதிகாரிகள் எண்ணிப் பார்த்தனர்.

நூறு ரூபாய் கட்டுகளை எண்ணியபோது அதில் ஒரு கள்ள நூறு ரூபாய் நோட்டு இருந்தது.

வைசியா பாங்கு செலுத்திய பணத்தில் அந்த கள்ள நோட்டு இருந்தது.

பாங்க் ஆப் மதுரா செலுத்திய 50 ரூபாய் கட்டில் ஒரு கள்ள நோட்டும் பத்து ரூபாய் கட்டில் ஒரு கள்ள நோட்டும் இருந்தன.

### போலீசில் புகார்

இதுபற்றி ரிசர்வ் வங்கி அதிகாரிகள் குற்றப்பிரிவு போலீசில் புகார் செய்துள்ளனர்

ரூபாய் நோட்டுகளைப் பெறும்போது கவனமாக இருக்குமாறு வங்கிகளுக்கு எச்சரிக்கை விடுக்கபபட்டுள்ளது.

## 10 வருடத்தில் ஒரு கிராமத்தில் பிறந்தவை இரு குழந்தைகள் மட்டுமே

ஆமதாபாத், ஜூன். 11- பரோடா மாவட்டம் அம்லா என்கிற ஒரு சிறிய கிராமம் பெரும் சாதனை ஒன்றை நடத்தியிருக்கிறது.

கடந்த 10 ஆண்டுகாலத்தில் இந்தக் கிராமத்தில் 2 குழந்தைகள் மட்டுமே பிறந்துள்ளன.

குஜராத் மாநிலத்தில் உள்ள இந்த கிராமத்தின் பெயர் அம்லா. கிராம மக்கள் அனைவரும் குடும்ப கட்டுப்பாடு திட்டத்தை செயல் படுத்துவதில் தீவிரமாக இருந்து இந்தச் சாதனையை ஏற்படுத்தியுள்ளனர்.

குஜராத் மாநில முதல் அமைச்சர் அமர்சிங் சவுத்திரி அம்லா கிராம மக்களை பெரிதும் பாராட்டினார்.

# ஆதிதிராவிடர்களுக்கு ரூபாய் 2 கோடியில் மூவாயிரம் வீடுகள்

### அமைச்சர் அருணாசலம் தகவல்

திருநெல்வேலி, ஜூன் 11— நெல்லை மாவட்டத்தில் ஆதி திராவிட மாணவ,மாணவியர்களுக்கான விடுதிகளை அமைச்சர் அருணாசலம் திறந்து வைத்தார் தாட்கோ மூலமாக ரூபாய் 2 கோடியில் 3 ஆயிரம் வீடுகள் கட்ட இருப்பதாகவும் அவர் கூறினார்.

திருச்செந்தூர், ஆறுமுகநேரியில் ரூபாய்19 லட்சம் செலவில் கட்டப்பட்ட ஆதிதிராவிட மாணவியர் விடுதியையும் திருச்செந்தூரில் 7 லட்சத்து 30 ஆயிரம் ரூபாய் செலவில் கட்டப்பட்ட ஆதிதிராவிடர் மாணவியர் இல்லத்தையும் அமைச்சர் அருணாசலம் திறந்துவைத்தார்,

சங்கரன் கோவிலில் 12 லட்சத்து 60 ஆயிரம் ரூபாய்செலவில் கட்டப்பட்டுள்ள ஆதிதிராவிடர் மாணவியர் இல்லத்தையும் அமைச்சர் திறந்துவைத்து பேசினார்.

### ரூ 2 கோடி திட்டம்

அவர் பேசுகையில் தாட்கோ மூலமாக ஆதிதிராவிடர்களுக்காக 3222 வீடுகள் சுமார் ரூபாய் 2 கோடி செலவில் கட்டிக்கொடுக்க அரசு ஆணை பிறப்பித்துள்ளதாகவும் அவற்றை விரைவில் கட்டி முடிக்க நடவடிக்கை எடுக்கும்படி தாட்கோவின் நிர்வாக இயக்குனரிடம் கேட்டுள்ளதாகவும் அமைச்சர் கூறினார்.

## அமைச்சர் நிகழ்ச்சிகள்

### ஆனூர் ஜெகதீசன்

ஜூன் 13- திண்டுக்கல், பழனி

### அருணாசலம்

ஜூன் 13- விருத்தாசலம் நெய்வேலி, குறிஞ்சிப்பாடி ஆளையப்பேட்டை, கண்ணாடி, 14- அரியலூர் சிறுகனியூர், கொளக்காநத்தம், அய்யனூர், கூடலூர். 15- பாடாலூர், தாரணமங்கலம், சிறுவயலூர், அழகிரிபாளையம் 16—திருச்சி நடையூர், 18-அரியலூர். சிருகூடல் பில்வாடி. 19—திருமானூர்.



பெரியார் மாவட்ட கூட்டுறவு நூற்பாலையில் நூல்பதனிடும் கட்டிடத்தை அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் திறந்து வைத்தார்,

## நாட் குறிப்பு

சென்னை 50-வது வட்டம். மூர்தெருவில் நாளை (12-ந்தேதி) மாலை 7மணி அளவில்எஸ்.ஆர்.அண்ணாதுரை தலைமையில், துரை முன்னிலையில் கழகக் கூட்டம் நடைபெறுகிறது.

கூட்டத்தில் சென்னை மாவட்டக் கழக செயலாளர் ஜேப்பியார், மதுரை இளவரசன், எம்.வி.ராமன் மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, கஜேந்திரபாபு, மணி, எல்லப்பன், ஆனந்தன், குமாரஜெகநாதன், அருள், காத்தவராயன் ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

### 31-வதுவட்டம்

சென்னை புரசைபகுதி 31-வது வட்டம் சார்பில் கழகப் பொதுக்கூட்டம் இன்று (11ந் தேதி) மாலை 7 மணி அளவில் எஸ்.ஆர்பி. கோயில் தெருவில் வாசன் தலைமையில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன். மதுசூதனன். நீலகண்டன் தங்கை கண்ணன் புருஷோத்தமன் ஜார்ஜ் சுப்பிரமணி, பன்னீர் செல்வம், ரவிச்சந்திரன், கோபிநாத், கணேசன், மோகன். இன்பசேகரன் லோகநாதன். அந்தோணி பிரகாசம், வெங்கடேசன் கோதண்டன். நித்தியானந்தன், குமார், எம்.குமார். வெங்கட்ராமன் ஆகியோர் கலந்து கொண்டு பேசுகின்றனர்

இரவு பல்லவன்சீனிவாசனின் கலை நிகழ்ச்சி நடைபெறும்

## நமது இல்லத் திருமணம்

வில்லிவாக்கம் 33-வது வட்ட எம்.ஜி.ஆர். இளைஞர் அணி துணைத்தலைவா பெருமாள்சாமிக்கும், அரும்பாக்கம் எல்லப்பா நாயக்கரின் மகள் கற்பகம் என்கிற மேகலாவிற்கும் இன்று (11-ந் தேதி) காலை அரும்பாக்கம் எம். எம். டி. ஏ காலனி சமூகக் கூடத்தில் திருமணம் நடைபெற்றது.

# சென்னை மாவட்ட கழக தொகுதி நிர்வாகிகள் ஆலோசனைக் கூட்டம்

முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையிலான அண்ணாவின் அரசு அமைந்து ஒன்பது ஆண்டு முடிந்து 10-ம் ஆண்டு துவங்குவதை முன்னிட்டு இம்மாதம் 29 30 தேதிகளில் கழக சார்பில் விழாக்களும் பேரணியும் நடக்க இருக்கின்றன.

சென்னையிலும் இதைச் சிறப்பாகக் கொண்டாடுவது குறித்து ஆலோசிக்க தொகுதி வாரியாக ஆலோசனைக் கூட்டம் நடைபெறுகிறது.

| நாள் | நேரம் | | தொகுதி |
|---|---|---|---|
| 14-6-86 | மாலை | 5 மணி | பெரம்பூர் |
| ,, | ,, | 7 மணி | புரசைவாக்கம் |
| ,, | ,, | 9 மணி | அண்ணாநகர் |
| ,, | ,, | 10 மணி | சைதாப்பேட்டை |
| 15-6-86 | காலை | 10 மணி | துறைமுகம் |
| ,, | | 12 மணி | பூங்கா நகர் |
| ,, | மாலை | 5 மணி | ராதாகிருஷ்ணன் நகர் |
| ,, | ,, | 7 மணி | ராயபுரம் |
| 16-6-86 | மாலை | 5 மணி | மயிலாப்பூர் |
| ,, | ,, | 7 மணி | திருவல்லிக்கேணி |
| ,, | ,, | 9 மணி | சேப்பாக்கம் |
| ,, | ,, | 10 மணி | எழும்பூர் |
| 17-6-86 | மாலை | 5 மணி | ஆயிரம் விளக்கு |
| ,, | ,, | 6 மணி | தியாகராயநகர் |

கூட்டம் நடைபெறும் இடங்களை அந்தந்த தொகுதி செயலாளர்கள் அறிவிப்பார்கள். இந்த நிகழ்ச்சியில் மாவட்ட அவைத்தலைவா பா. அங்கமுத்து, மாவட்ட எம். ஜி. ஆா. மன்ற செயலாளர் இ. மதுசூதனன் மாவட்ட துணைச்செயலாளர் கு க செல்வம். மாவட்ட பொருளாளர் எஸ். ஏ ராஜபாண்டியன் தென்சென்னை மாவட்டச் செயலாளர் டி.கே.கபாலி வடசென்னை மாவட்ட செயலாளர் மு வேதாசலம். மத்திய சென்னை மாவட்டச்செயலாளர் ஏ. ராஜ்குமார் ஆகியோரும் என்னுடன் இந்தக் கூட்டத்தில் கலந்து கொள்கிறார்கள்.

கூட்டங்களுக்கு அந்தந்த தொகுதி கழக செயலாளர் தலைமை வகிப்பார்கள் நிர்வாகிகள் தவறாது கலந்து கொள்ளுமாறு அன்புடன் வேண்டுகிறேன,

இவண்
**ஜேப்பியார்**
மாவட்டச் செயலாளர்

சென்னை—14
11—6—86

## சரக்கு ரயில் தடம் புரண்டது: ரயில்கள் தாமதம்

சென்னை, ஜூன் 11- அச்சரப்பாக்கத்திற்கும் தொழுப்பேடுக்கும் இடையே கூட்ஸ் டிரெய்ன் ஒன்று தடம் புரண்டது. இதன் காரணமாக அதிகாலை 2.15மணியிலிருந்து காலை 9 மணி வரைவந்து சேர வேண்டிய ரயில்கள் 1½ மணிநேரம்முதல் 6மணி நேரம் வரை தாமதமாக வந்து சேர்ந்தன.

எழும்பூரில் இருந்து புறப்பட்டுச் சென்ற ரயில்கள் சிலவும் தாமதமாகச் சென்றன.



## பொதுச் செயலாளர் இராகவானந்தம் நிகழ்ச்சிகள்

சென்னை, ஜூன் 11— கழக பொதுச் செயலாளர் எஸ். இராகவானந்தம் சுற்றுப்பயண நிகழ்ச்சிகள் விவரம் வருமாறு:-

ஜூன் 12-ந் தேதிமாலை முத்துநகர் எக்ஸ்பிரஸ் மூலம் தூத்துக்குடி புறப்படுதல் 13ந்தேதி காலை 8 மணி தூத்துக்குடி அடைதல்

காலை: திருமண நிகழ்ச்சி

மாலை: பொதுககூட்டம்

14-ந் தேதி மாலை முத்துநகர் எக்ஸ்பிரஸ் மூலம் சென்னை புறப்படுதல்.

15-ந் தேதி காலை சென்னை வந்தடைதல்.

# ஆஸ்திரேலியாவில் 1300 சோதனை குழாய் குழந்தைகள்

டோக்கியோ, ஜூன் 11- ஆஸ்திரேலியாவில் சோதனைக் குழாய் மூலம் ஆயிரத்து முன்னூறுக்கும் மேற்பட்ட குழந்தைகள் பிறந்துள்ளதாக ஆஸ்திரேலிய மருத்துவா ஒருவர் தெரிவித்துள்ளார்.

அடலாய்டு பல்கலைக் கழகத்தை சேர்ந்தவர் டாக்டர் ராபர்ட்சீமார்க். இவர் ஜப்பான் வந்துள்ளார். இங்கு இவர் பேசுகையில் ஆஸ்திரேலியாவில் 1300க்கும் மேற்பட்ட சோதனை குழாய் குழந்தைகள் செயற்கை கருத்தரிப்பின் மூலம் பிறந்து ஆஸ்திரேலியாவிலுள்ளதுள்ளதாக கூறினார்.

செயற்கை கருத்தரிப்பு முறையை புற நோயாளிகள் பிரிவில் செயல் படுத்தப்படுவதாகவும் அவா கூறினார்.

செயற்கை கருத்தரிப்பு முறை பற்றிய நுட்பங்களை ஜபபான் நாட்டு நிபுணர்களுடன் சீமார்க் பகிர்ந்து கொண்டார்.

# திருச்சிராப்பள்ளி மாவட்ட ஆட்சியரின் அறிவிக்கை

1986ம் ஆண்டு ஜூலை திங்கள் பதினாறாம் நாள் முதல் 1986 ம் ஆண்டு டிசம்பர் திங்கள் முப்பத்து ஒன்று முடிய சாராயக்கடைகள் சில்லரை விற்பனைநிமித்தம் விடுக்கும் ஏல அறிவிப்பு:-

1986 ம் ஆண்டு தமிழ்நாடு சாராயக்கடைகள் (ஏல விற்பனை) விதி ஐந்தின்படி (1986ம் ஆண்டு ஜூலை திங்கள் பதினாறாம் நாள் முதல் 1986 ம் ஆண்டு டிசம்பர் திங்கள் முப்பத்தி ஒன்று முடிய) உள்ள காலத்திற்கு, திருச்சிராப்பள்ளி மாவட்டத்திற்கு அங்கீகரிக்கப்பெற்றுள்ள 476 சாராயக் கடைகளையும் கீழே குறிப்பிட்டுள்ள மாவட்ட ஆட்சித் தலைவரால் அதிகாரம் அளிக்கப்பட்டுள்ள சார்ஆட்சியாளர், கோட்டாட்சியாளர்கள், மற்றும் தனி துறை ஆட்சியாளர்களால் திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள 10 வட்டாட்சியர் அலுவலகங்களில் அதன் எதிரே குறிப்பிட்டுள்ள நாட்களிலும் நேரங்களிலும் சாராயக் கடைகள் வரிசை எண் படி ஏலம் விடப்படும்.

| வ. எண் | வட்டத்தின் பெயர் | விற்பனை அலுவலர் விவரம் | ஏலம் விடப்படும் இடம் | ஏல விற்பனை தொடங்கும் நாள் | ஏல விற்பனைக்குரிய சாராயக் கடைகள் விபரம் |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 1. | திருச்சி | கோட்டாட்சித் தலைவர் திருச்சி | வட்டாட்சியர் அலுவலகம் திருச்சி | 17—6—86 காலை 9 மணி | 27—சாராயக்கடைகள் (1-முதல் 27-முடிய) |
| | | | | 18—6—86 காலை 9 மணி | 27—சாராயக்கடைகள் (28- முதல்54-முடிய) |
| | | | | 19—6—86 காலை 9 மணி | 25—சாராயக்கடைகள் (55-முதல்79-முடிய) |
| 2 | கரூர் | சார் ஆட்சியாளர் கரூர் | வட்டாட்சியர் அலுவலகம் கரூர் | 17—6—86 காலை 9 மணி | 24—சாராயக்கடைகள் (1முதல் 24- முடிய) |
| | | | | 18—6—86 காலை 9 மணி | 24—சாராயக்கடைகள் (25-முதல்48-முடிய) |
| | | | | 19—6—86 காலை 9 மணி | 24—சாராயக்கடைகள் (49-முதல்-72முடிய) |
| 3. | குளித்தலை | மாவட்ட வழங்கல் அலுவலர் திருச்சி | வட்டாட்சியர் அலுவலகம் குளித்தலை | 20—6—86 காலை 9 மணி | 20—சாராயக்கடைகள் (1-முதல் 20-முடிய) |
| | | | | 23—6—86 காலை 9 மணி | 19—சாராயக்கடைகள் (21-முதல்39-முடிய) |
| 4. | மணப்பாறை | தனித்துணை ஆட்சியாளர் (அகதிகள் முகாம்) கொட்டப்பட்டு, திருச்சி | வட்டாட்சியர் அலுவலகம் மணப்பாறை | 17—6—86 காலை9மணி | 16—சாராயக்கடைகள் (1 முதல் 16 முடிய) |
| | | | | 18—6—86 காலை 9 மணி | 16—சாராயக்கடைகள் (17 முதல் 32 முடிய) |
| 5. | பெரம்பலூர் | மாவட்ட ஆதிதிராவிடர் நல அலுவலர் திருச்சி | வட்டாட்சியர் அலுவலகம் பெரம்பலூர். | 20—6—86 காலை 9 மணி | 25—சாராயக்கடைகள் (1 முதல் 25 முடிய) |
| | | | | 23—6—86 காலை 9 மணி | 25—சாராயக்கடைகள் (26 முதல் 50 முடிய) |
| | | | | 24—6—86 காலை 9மணி | 26—சாராயக்கடைகள் (51 முதல் 76 முடிய) |
| 6. | அரியலூர் | மாவட்ட பிற்பட்டோர் நலஅலுவலர், திருச்சி | வட்டாட்சியர் அலுவலகம் அரியலூர் | 17—6—86 காலை 9 மணி | 17—சாராயக்கடைகள் (1 முதல் 17 முடிய) |
| | | | | 18—6—86 காலை 9 மணி | 18—சாராயக்கடைகள்) (18 முதல் 35 முடிய) |
| 7. | உடையார் பாளையம் | கோட்டாட்சித் தலைவர் அரியலூர் | வட்டாட்சியர் அலுவலகம் ஜெயங்கொண்டம் | 20—6—86 காலை 9 மணி | 15—சாராயக்கடைகள் (1 முதல் 15 முடிய) |
| | | | | 23—6—86 காலை 9 மணி | 16—சாராயக்கடைகள் (16 முதல் 31 முடிய) |
| 8. | லால்குடி | கோட்டாட்சித் தலைவர் முசிறி | வட்டாட்சியர் அலுவலகம் லால்குடி | 20—6—86 காலை 9 மணி | 21—சாராயக்கடைகள் (1 முதல் 21 முடிய) |
| | | | | 23—6—86 காலை 9 மணி | 21—சாராயக்கடைகள் (21 முதல் 42 முடிய) |
| 9. | முசிறி | மாவட்ட ஆட்சியரின் கூடுதல் தனி உதவியாளர், திருச்சி. | வட்டாட்சியர் அலுவலகம், முசிறி | 20—6—86 காலை 9 மணி | 15—சாராயக்கடைகள் (1—முதல் 15 முடிய) |
| | | | | 23—6—86 காலை 9 மணி | (14- சாராயக்கடைகள் (16 முதல் 29 முடிய) |
| 10. | துறையூர் | தனி அலுவலர், மாவட்ட ஆய்வுக்குழு, திருச்சி | வட்டாட்சியர் அலுவலகம், துறையூர், | 17—6—86 காலை 9 மணி | 20—சாராயக்கடைகள் (1 முதல் 20முடிய) |
| | | | | 18—6—86 காலை 9 மணி | 21—சாராயககடைகள் (21 முதல் 41 முடிய) |

ஏல விதிகள் மற்றும் இதர கண்டிஷன்கள் அடங்கிய அறிவிப்பு அனைத்து வட்டக்கலால் அலுவலகத்திலும் உள்ளது. வேண்டுவோா இந்த பதிப்பினை வட்டகலால் அலுவலர்களிடமிருந்து உரிய தொகையினை கொடுத்து பெற்றுக் கொள்ளலாம்.

ஏலததில சொத்து மதிப்பு சான்றிதழ் தாக்கல் செய்பவர்கள் சொத்து மதிப்பு சான்றில் உள்ள தொகைக்கு சமமான 2½மடங்கு தொகைக்கு மட்டுமே ஏலம் கேட்க அனுமதிக்கப்படுவார்கள்

ஏலம எடுத்தவர் ஏலம் உறுதி செய்யப்பட்ட உத்தரவு பெற்ற ஒருவார காலத்திற்குள் 2½ மாத வைப்புத்தொகையை கட்டி, விதிகளுக்குட்பட்ட இடத்தில் கடை அமைக்க உரிமம் கோரி மனுச் செய்யாவிடில் அல்லது ஒரு வாரத்திற்குள் விதிகளுக்கு உட்படாமல் உரிமம் கோரி மனுச செய்தாலும் உறுதி செய்த ஒருவாரம் முடிந்தவுடன் மாதாந்திர கிஸ்தி தொகை வசூல் செய்யப்படும்.

**வ. விஸ்வநாதன், இ. ஆ. ப.**
மாவட்ட ஆட்சிதலைவர்
திருச்சிராப்பள்ளி

DIPR 24091-86-12 Efficient

# சிங்களராணுவ கொடுஞ்செயல் தமிழர்கள் வாளால் வெட்டிக் கொலை

## விடுதலைபுலிகள் பதிலடி

**கொழும்பு, ஜூன் 11- இலகைங்யில் 37 அப்பாவி தமிழர்களை துப்பாக்கியால் சுட்டும் அரிவாளால் வெட்டியும் இலங்கை ராணுவத்தினர் படுகொலை செய்துள்ளார்கள்.**

இலங்கையில் பல்வேறு இடங்களில் விடுதலைப புலிகளுக்கும் ராணுவத்துக்கும் கடும்போர் நடந்து வருகிறது. விடுதலைப் புலிகளை சமாளிக்க முடியாமல் திணறிக் கொண்டிருக்கும் ராணுவத்தினர் அப்பாவி தமிழர்களை மிருகத்தனமாக கொன்று குவித்து வருகிறார்கள்.

### வாளால் வெட்டினர்

யாழ்ப்பாணம் அருகில் மண்டைத்தீவு என்ற சிறிய தீவு உள்ளது. அங்கு37 அப்பாவி தமிழர்களை ராணுவத்தினர்சூழ்ந்து கொண்டு படுகொலை செய்தார்கள். சிலரை வாளால் வெட்டிக் கொன்றனர். மற்றவாகளை வெகு அருகில் நிற்க வைத்து துப்பாக்கியால் சுட்டுக் கொன்றார்கள்.

வல்வெட்டித்துறை என்ற இடத்தில் ராணுவத்தினரை விடுதலைப் புலிகள் நாற்புறமும் சூழ்ந்து முற்றுகையிட்டுள்ளனர்,

முற்றுகையை உடைத்துக்கொண்டுதப்பிச்செல்ல ராணுவத்தினர் முயற்சி செய்தபோது இருதரப்பினருக்கும் இடையே பயங்கர துப்பாக்கி சண்டை மூண்டது. ராணுவததினருக்கு ஆதரவாக விமானங்கள் குண்டு வீசின. விடுதலைப்புலிகள் சுட்டதில் ராணுவத்தினர் மூன்று பேர் பலியானார்கள். 6 பேர் காயம் அடைந்தன

இலங்கை கடற்படைப் படகுகள் கரையில் உள்ள தமிழர்களை நோக்கி சுட்டன. இதில் 75 வீடுகள் தரைமட்டமாயின.

கிளிநொச்சியில் ராணுவத்துக்கும் விடுதலைப் புலிகளுக்கும் கடந்த ஏழு நாட்களாக போர் நடந்து வருகிறது.

கிளிநொச்சியிலுள்ள ராணுவ முகாமைவிடுதலை புலிகள் முற்றுகையிட்டுள்ளனர். முகாமை விட்டு வெளியே வர முயன்ற இலங்கை ராணுவத்தினர் விடுதலைப்புலிகளின் தாக்குதலை சமாளிக்க முடியாது திணறுகிறார்கள்.

விடுதலைப் புலிகளிடம் சிக்கி கிளிநொச்சி முகாமில் இருக்கும் ராணுவத்தினரை மீட்க வவுனியா மற்ற பகுதிகளிலிருந்து ராணுவத்தினர் வர முயன்றனர். ஆனால்வழியிலுள்ள பாலங்களை விடுதலைப்புலிகள் தகர்த்து விட்டதால் ராணுவத்தினரால் அங்கு செலல முடியவில்லை. கிளிநொச்சி முகாமிற்கு தண்ணீர் மற்றும் மின்சப்ளையை விடுதலைப் புலிகள் துண்டித்துள்ளனர்

பருத்தித்துறை முகாமையும் விடுதலைப் புலிகள் முற்றுகையிட்டுள்ளனர். கொழும்பு உள்ளிட்ட பல நகரஙகளில்சகஜவாழ்க்கை பாதிக்கப்பட்டுள்ளது.

விடுதலைப் புலிகளின் தாக்குதலை சமாளிக்க முடியாமல் இலங்கை ராணுவத்தினா துவண்டுள்ளதாக தெரிகிறது.

## சிகிச்சை முகாம்

ராணிப்பேட்டை,ஜூன்11- தமிழ்நாடு கால்நடை பராமரிப்புதுறைஇராணிப்பேட்டை கோட்டமும், கனரா வங்கி விளாப்பாக்கமும் இணைந்து திமிரி ஊராட்சி ஒன்றியத்தைச் சார்ந்த பரதராமி கிராமத்தில் சிறப்பு கால்நடை சிகிச்சை முகாமை நடத்தினர்.

சிகிச்சை முகாமினை டாக்டர் ஆர். பாலசுப்பிரமணியன். துவக்கி வைத்தார் நிகழ்ச்சிக்கு டாக்டர் வி. எல், பாலசுப்பிரமணியன். தலைமை வகித்தார்.

முகாமில் 7550 கால் நடைகளுக்கு சிகிச்சை அளிக்கப்பட்டது.

அதிக பால் உற்பத்தி செய்த அங்கத்தினர்களுக்கும், குறித்த காலத்தில் கடனை திருப்பிச் செலுத்திய அங்கத்தினர்களுக்கும் வடாற்காடு பால் உற்பத்தியாளர் கூட்டுறவு ஒன்றிய பெருந்தலைவர் சி.கோபால் பரிசுகள் வழங்கினார்.

## ஒரு ரூபாய் நோட்டு ஒழிப்பு

லக்னோ, ஜூன் 11— ஒருரூபாய்நோட்டு ஒழிக்கப்பட்டு நாணயங்கள் அதிகமாக வெளியிடப்படும் என்று மத்திய நிதி அமைச்சர் பிரதாப்சிங் கூறினார்

இதுபற்றி அவர் கூறியதாவது:

இந்தியாவில் ஒரு ரூபாய் நோட்டு புழக்கத்தில் உள்ளது. ஒரு ரூபாய் நோட்டுகளை மக்கள் பெரிதும் உபயோகப் படுத்துவதால் அவை சீக்கிரம் கசங்கி, கிழிந்து விடக்கூடிய நிலை ஏற்படுகிறது. இதனால் மீண்டும் புதிய ரூபாய் நோட்டுகள் அச்சடிக்க வேண்டியுள்ளது. இதில் பல சிரமங்கள் உள்ளன.

எனவே 1 ரூபாய் நோட்டுக்கு பதிலாக 1 ரூபாய் நாணயங்கள் அதிக அளவில் புழககத்தில் விடப்படும்.

1 ரூபாய் நோட்டு படிப்படியாக ஒழிக்கப்படும்,

இவ்வாறு பிரதாப் சிங் கூறினார்.

## குடிநீர்சப்ளை உக்கம்சந்த் ஆலோசனை

செங்கற்பட்டு, ஜூன் 11- தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் எஸ்.டி.உக்கம்சந்த்கும்மிடிபூண்டி தொகுதியில் எல்லாபுரம் மற்றும் கும்மிடிப்பூண்டி ஒன்றியத்தில் வறட்சியால் பாதிக்கப்பட்ட இடங்களை பார்வையிட்டார்.

எல்லாபுரம் ஊராட்சி ஒன்றிய அலுவலகத்திலும், கும்மிடிப்பூண்டி ஊராட்சி அலுவலகததிலும் நடைபெற்ற குடிநீர்ப் பிரச்சினைப் பற்றிய ஆய்வில் கலந்து கொண்டார். இரண்டு ஊராட்சி ஒன்றியங்களையும் சேர்ந்த, அனைதது ஊராட்சி மன்ற தலைவர்களும் இந்த ஆய்வில் கலந்து கொண்டனர்.

அவருடன் கும்மிடிப்பூண்டி சட்டமன்ற உறுப்பினரும் செங்கை மாவட்ட கழக செயலாளருமான ஆர். எஸ் முனிரத்தினம் சென்னை செங்கை வட்ட மேற்பார்வை பொறியாளர் நாகராசன் மற்றும் கும்மிடிபூண்டி நிர்வாகப் பொறியாளர் கொண்டல் ராவ் ஆகியோர்சென்றனர்

## வங்கி ஊழியர் இருவர் உதகையில் மர்ம மரணம்



உதகமண்டலம், ஜூன் 11— வங்கி ஊழியர் இருவர் மர்மமான முறையில் உதகையில் மரணமடைந்துள்ளனர். இவர்கள் இருவரும் சிண்டிகேட் வங்கி ஊழியாகள்.

சிண்டிகேட் வங்கி ஊழியர் ஐவர் உதகைக்கு சுற்றுலா சென்றனர். இவர்கள் ஞாயிறு அன்று கோத்தகிரி அருகே ஒரு முக்கிய இடத்திற்குச் சென்றனர் அங்குள்ளவர்கள் உதவியோடு தெங்கு மராத்தா மலைக்குச் சென்றனர்.

4 கிலோமீட்டர் நடந்து சென்று சிறிது களைப்பாற ஒரு பாறையில் அமர்ந்தனர் அங்கு அமர்ந்து அவர்கள்பிஸ்கட் தின்றனா பிஸ்கட் சாப்பிட்டுக் கொண்டு இருந்தவர்களில் ராஜேந்திரன் என்பவர் தண்ணீர் கேட்டார். தண்ணீர் குடித்தவுடன் அவர் திடீரென்று சுருண்டு விழுந்துவிட்டார்

### மயங்கி விழுநதார்

அப்போது மற்றொருவரும் மயங்கிவிழுந்தார். அவரது பெயர் ராஜ்குமார் மற்ற மூவரும் பக்கத்து ஊருக்கு ஓடிச் சென்று உதவிக்கு ஆட்களை அழைத்து வந்தனர். ஆனால் ராஜேந்திரனும் ராஜ்குமாரும் அதற்குள் மரணம் அடைந்து விட்டனர்.

இறந்த இருவரது உடலும் பெரியார் மாவட்டம் சத்தியமங்கலம் மருத்துவமனைக்கு கொண்டு வரப்பட்டது.

பாஸ்கர், ஸ்ரீராம்,ரமேஷ் ஆகிய மற்ற மூவரும் அந்த மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர்.

சுற்றுலா சென்ற இந்த ஐவரும் சென்னையைச் சேர்ந்தவர்கள் திருமணம் ஆகாதவர்கள்.

இவர்கள் சாப்பிட்ட பிஸ்கெட்டில் விஷம் கலந்து இருக்குமோ என்றசந்தேகம் ஏற்பட்டுள்ளது.

சோனூர் முட்டம் போலீசாா இது குறித்து விசாரித்து வருகின்றனர்.

## அகதிகள் முகாமை அமைச்சர் ராமசாமி பார்வையிட்டார்

சேலம், ஜூன் 11— சேலம் மாவட்டத்தில் ராசிபுரம்,மேட்டூர், குமரகிரி, ஓமலூர், ஆத்தூர் ஆகிய இடங்களில் உள்ள இலங்கைத் தமிழர் அகதிகள் முகாம்களை மறுவாழ்வு மற்றும் வேலை வாய்ப்புத்துறை அமைச்சர் டி. ராமசாமி பார்வையிட்டார்,

ராசிபுரம் அகதிகள் முகாமிலுள்ள 35 அகதிகள் குடும்பத்திற்கு எவர்சில்வர் பாத்திரங்களை அமைச்சர் டி. ராமசாமிவழங்கினார்,

ஆத்தூர் அகதிகள் முகாமை விரிவுபடுத்தி போதுமான வசதிகள் செய்து கொடுக்க அதிகாரிகளுக்கு அமைச்சர் உத்தரவிட்டார்.

ஓமலூர் அகதிகள் முகாமிலுள்ள குழந்தைகளை பள்ளியில் சேர்த்திடவும் அமைச்சர் டி. ராமசாமி உத்தரவிட்டார்.

## வங்கியில் கொள்ளை முயற்சி: நான்கு பள்ளி மாணவர்கள் கைது

புதுடெல்லி. ஜூன். 11-டெல்லி வங்கிஒன்றில் கொள்ளையிட முயன்ற நான்கு பள்ளிச்சிறுவர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

டெல்லியிலுள்ள சப்ரோடாபூங்கா பகுதியில் விமானப்படை பள்ளி உள்ளது இந்தப் பள்ளியில் சிண்டிகேட் வங்கியின் விரிவாக்க பிரிவு உள்ளது.

### பள்ளி மாணவர்கள்

இந்தவங்கியில் கடந்த 8-ந் தேதி இரவு நான்கு பள்ளி மாணவர்கள் ஒன்று சேர்ந்து சென்று இரும்பு கம்பியால் பீரோவின் லாக்கரை உடைத்துபணம் இருக்கிறதா என்று பார்த்தனர். அவர்கள் துரதிர்ஷ்டம் பீரோ காலியாக இருந்தது.

இதற்கிடையில் சத்தம் கேட்டு ஓடி வந்த காவலாளி மாணவர்களை துரத்தினார். இதில் ஒருவன் பிடிபட்டான். அவன் கொடுத்த தகவலின் பேரில் மற்ற மூவரும் கைது செய்யப்பட்டுள்ளனர்.

போலீசார் இது பற்றி விசாரித்து வருகின்றனர்.

## ஆந்திர மாநில வீட்டு வசதி மந்திரி தேர்தல் செல்லாது

### ஐகோர்ட் தீர்ப்பு

ஐதராபாத். ஜூன் 11- ஆநதிர மாநில வீட்டு வசதிஅமைச்சர் ராஜேஸ் கவுட் தேர்தல் செல்லாது என ஆந்திர ஐகோர்ட் தீர்ப்பளித்துள்ளது.

ஆந்திர மாநிலம் ஜாக்டியால சட்டமன்ற தொகுதியில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர ராஜேஷ் ஹாம் கவுட்.

தற்போது இவர் ஆந்திர மாநில வீட்டு வசதித்துறை அமைச்சராக உள்ளார்.

அமைச்சர் எம்.எல்.ஏவாக தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது என டி. லிங்காரெட்டி என்பவர் ஆந்திர ஐகோர்ட்டில் வழக்கு தொடர்ந்தார்.

சட்ட மன்ற தொகுதியில் போட்டியிட வேட்புமனு தாக்கல் செய்திருந்த செட்டி ராஜேஸ்வா என்பவரின் வேட்புமனு நிராகரிக்கப்பட்டது செல்லாது என்றும் ஆகவே அத தொகுதியில் நடைபெற்ற தேர்தல் செல்லாது என்றும் அறிவிக்கவேண்டும்எனவும் மனுவில் குறிப்பிடப்பட்டிருந்தது.

இந்த வழக்கை விசாரித்த நீதிபதி தி. பி. ரமாராவ் அமைச்சர் எம்.எல்.ஏ.வாக தேர்வுபெற்றது செல்லாது என தீரப்பளித்தார்.

அனால் இந்தத் தீர்ப்பு 30 நாட்களுக்கு நிறுத்து வைக்கப்படும் எனவும். இடையில் அமைச்சர் வாக்கெடுப்பில் கலந்து கொள்ளக்கூடாது என்றும் நீதிபதி மேலும் தெரிவித்துள்ளாா.

## அரிசி கூடுதல் ஒதுக்கீடு

புதுடெல்லி, ஜூன 11— மாநிலஙகளுக்கு மத்திய அரசு வழக்கமாக வழங்கும் அரிசியைவிட கூடுதல் ஒதுக்கீட்டை அறிவித்துள்ளது.

27.2 லட்சம் டன் அரிசி மற்றும் கோதுமையை ஒதுக்கியுள்ளது.வழக்கமாக 22.8 லட்சம் டன் மத்திய அரசு ஒதுக்கிவந்தது.

தமிழ்நாடு. கர்நாடகம் உள்ளிட்ட மாநிலங்களுக்கு கூடுதலாக 1 லட்சத்து 35 ஆயிரம் டன் அரிசியை இடைக்கால ஒதுக்கீடாக ஒதுக்கியுள்ளது.

## ஜப்தி நிறுத்தம்: புரட்சித்தலைவருக்கு பழனியாண்டி பாராட்டு

சென்னை,ஜூன். 11— வறட்சியால் பாதித்த மாவட்டங்களில் ஜப்தி நடவடிக்கைகளைநிறுத்தி வைக்க உத்தரவிட்ட முதல்வர் புரட்சித் தலைவருக்கு தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி பாராட்டு தெரிவித்துள்ளார்.

தமிழ் நாட்டில்11மாவட்டங்கள் வறட்சிக்குட்பட்டுள்ளன என்று முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்து வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ள மாவட்டங்களில் எந்தவித ஜப்தி நடவடிக்கைகளையும் இராது என அறிவித்துள்ளது தெரிந்ததே.

கோவை,சேலம்,தர்மபுரி, அண்ணா, மதுரை, ராமநாதபுரம், பசும்பொன் முத்துராமலிங்கம், காமராசர், திருச்சி, பெரியார், கன்னியாகுமரி மாவட்டங்களில் இவ்வறிவிப்பின் காரணமாக விவசாயப் பெருங்குடி மக்களும், விவசாயிகளின் பிரதிநிதிகளும், மிகவும் மகிழ்ச்சி அடைந்துள்ளனர். இதுகுறித்து பல்வேறு மாவட்டங்களில் இருந்து முதல்வர் புரட்சித் தலைவருக்கு நன்றி தெரிவிப்பு தீர்மானங்களும்தந்திகளும் அனுப்பப்பட்டு வருகின்றன.

இதுகுறித்து தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பழனியாண்டிஒருஅறிக்கைவெளியிட்டுள்ளார். அதில் வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ள மாவட்டங்களில் ஜப்தி நடவடிக்கைகள் மின் இணைப்பு துண்டிப்பு ஆகியவற்றை நிறுத்தி நிலவரி வசூலைத் தள்ளி வைத்து விவசாயப் பெருங்குடி மக்களின் இல்லங்களில புத்தொளியை ஏற்றி வைத்த புரட்சித் தலைவரை பாராட்டியுள்ளார்.

வறட்சியால் பாதிக்கப்பட்ட மாவட்டங்களில் அளித்த இச்சலுகையை. வறட்சி மற்றும் வெள்ளம் ஆகியவற்றால் பாதிக்கப்பட்டுள்ள விவசாயிகளுக்கும் வழங்க வேண்டும் என்றும் பழனியாண்டி கூறினார்

முனைஆதி தலைமையிலான விவசாய உயர்மட்டக்குழு அளித்த அறிக்கையை அரசு உடனடியாக பரிசீலனை செய்து முடிவை அறிவிக்க வேண்டும் என்றும் பழனியாண்டி கூறினார்.

சேலம் மாவட்டச் செயலாளர் கே.பி செல்வராஜ் விடுத்த அறிக்கையில் சேலம் மாவட்டத்தை வறட்சிப்பகுதியாக அறிவித்து ஜப்தி நடத்துவதை நிறுத்தியதற்காக மாவட்ட விவசாயிகளின் சார்பாக புரட்சித்தலைவருக்கு நன்றியை தெரிவித்துள்ளார்.

இதுபோன்று பல மாவட்டங்களில் இருந்து நன்றி செய்திகள் வந்தவண்ணமாக இருக்கின்றன

### பேச்சாளர் முகவரி

ராங்கிமலை நாகராசன் 29 கொத்தவால் சாவடி தெரு ... டை சென்னை-15

## நுகர் பொருள் வாணிபக்கழக அண்ணா சங்க கூட்டம்

சென்னை, ஜூன் 11— தமிழ்நாடுநுகர் பொருள் வாணியக் கழக அண்ணா தொழிலாளர் சங்கத்தின் மாநில செயற் குழு கூட்டம் வரும் 15ந் தேதி காலை10மணிக்குசென்னையிலுள்ள ஓட்டல்காஞ்சியில் நடைபெறுகிறது. இக்கூட்டத்திற்கு ஜேப்பியார் தலைமை வகிக்கிறார். நிர்வாகிகள் அனைவரும் தவறாது பங்கேற்குமாறு மாநில செயலாளர் ஏழுமலை கேட்டுக்கொண்டுள்ளார்.

## சென்னையில் இலவச மருத்துவ முகாம்கள்

சென்னை, ஜூன். 11- வைஜயந்திமாலாமன்றம் சார்பில் சென்னை நகரிலும் மற்ற இடங்களிலும் மருத்துவமுகாம்கள் நடத்தப்படுகின்றன.

வைஜயந்திமாலா நற்பணி மன்றங்கள் இணைக்கப்பட்டு அகில இந்திய வைஜயந்திமாலா நற்பணி மன்றம் உருவாக்கப்பட்டுள்ளது இதன் தலைவராக கத்தியாரா ஜனார்த்தனம் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். இம்மன்றத்தின் துணைத் தலைவர்களாக வழக்கறிஞா தெய்வசிகாமணி, டாக்டர் ரமாதேவி, பி. பாண்டியன் ஆகியோரும் பொதுச் செயலாளர்களாக வி. சோமசுந்தரம், மைதிலி ராகவன். ஏ.எம், தாஸ் ஆகியோரும், இணைச்செயலாளர்களாக வி. விஜயா. வெ. சவுந்தரராசன் ஆகியோரும் பொருளாளராக ராமானுஜமும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

இம்மன்ற துவக்க விழா இம்மாதம் 22-ந் தேதி நடைபெறுவதாகவும்,29 ந் தேதி முதல் தொடர்ந்து மருத்துவ முகாம்கள் நடைபெறவுள்ளதாகவும் நிர்வாகிகள் கூறினா.

## சென்மன்விளை கழக மாணவா ஆலோசனைக் கூட்டம்

கன்னியாகுமரி ஜூனை 11- சென்மன்விளை கழக மாணவர் அணி அமைப்பாளரும், சடையமங்கலம் ஊராட்சி உறுப்பினருமான சூசை மரியான் தலைமையில் நிதலாரன்ஸ் மேல்நிலை பள்ளி மாணவா ப ஜெயகுமார் முன்னிலையில் மன்ற அலுவலகத்தில கழக மாணவர் ஆலோசனைக் கூட்டம் நடைபெறறது

சிறப்பு அழைப்பாளர்களாக மாவட்ட மாணவர் கழக பொறுப்பாளர் தே. இராஜகுமார இடையல் இராஜேந்திரன். சடையமங்கலம் ஊராட்சி மகளிர் உறுப்பினர் சி. சுந்திரவல்லி ஆகியோர் கலந்து கொண்டனர்

## பஞ்சாலை ஊதியக்குழு: உறுப்பினராக பழனிச்சாமி நியமனம்

கோவை, ஜூன் 11— பஞ்சாலை ஊதியக்குழுவில் உறுப்பினராக கோவை மாவட்ட பஞ்சாலை அண்ணா தொழிற்சங்க துணைப் பொதுச்செயலாளர் ஆர். பழனிசாமி நியமிக்கப்பட்டுள்ளார்.

## சமூக சேவை செய்த நீதிபதிக்கு கிடைத்தபரிசு !

புதுடெல்லி,ஜூன் 11- சமூக சேவையில் ஈடுபட்ட நீதிபதிக்கு மாற்றல் உத்தரவு பரிசாக கிடைத்த கொடுமை நடந்துள்ளது

பீகார் மாநிலத்திலுள்ளது தியோகார். இங்கு மாவட்ட நீதிபதியாக பணியாற்றியவர் அஜய்குமார்.

### சமூக சேவை

இந்த ஊரிலுள்ள தயானந் ஆலயத்தின் முன் தெப்பக் குளம் ஒன்று இருக்கிறது இது பல ஆண்டுகளாக சரிவர பராமரிக்கப்படாது இருந்ததால் துர்நாற்றம் கிளம்பியது இதைப்பார்த்த அஜய்குமாருக்கு எல்லோரையும் போல் ஒதுக்கிவிட மனமில்லை.

உடனடியாக பல்லாயிரக் கணக்கான மக்களை அஜய்குமார் திரட்டினார். இதுல் வட்சுமிபூர் முன்னாள் மகாராணியும் சேர்ந்தார். அவர்கள் உதவியுடன் அந்தக்குளத்தை சுத்தப்படுத்தினார். பெரியதொரு பணியை செய்த நிறைவுடன் இருந்த அஜய்குமார் மீது அங்குள்ள அரசியல் பிரமுகர்கள் சிலர் கோபம் கொண்டனர்.

உடனடியாக அஜய்குமாரை மாற்றாவிட்டால் மக்கள் அவாபக்கம் சென்று விடுவார்கள் என்று பயந்து அஜய்குமாரை உடனடியாக வேறு ஊருக்கு மாற்ற ஏற்பாடு செய்தனர் அஜய்குமார் பாட்னாவுக்கு மாற்றப்பட்டார்.

அஜய்குமார் தியோகாருக்கு மாற்றலாகி வந்த ஒன்பது மாத காலத்திற்குள்ளேயே இந்த மாறுதல் நடைபெறறது. மாவட்ட அதிகாரிகளை குறைந்தபட்சம் மூன்று ஆண்டுகளுக்கு மாற்றல் செய்யக்கூடாது என்று விதி இருந்தும் அதையும் மீறி அஜய்குமார் மாற்றப்பட்டார்.

### ஆலயந் தெப்பக்குளம்

சமூகசேவையில் ஈடுபட்டதற்காக 'மாற்றல்' பரிசைப் பெற்ற அஜய்குமார் சற்றும் கலங்கவில்லை சமூக சேவையில் ஈடுபடுவோருக்கு இதுதான் பரிசு என்றால் சமூக சேவை மனப்பான்மையே மாறிவிடும்.



## கொள்ளை கும்பல் கைது

நாகப்பட்டினம், ஜூன் 11- திருவாரூரில் பூட்டிய வீடுகளில் கொள்ளை அடிக்கும் ஐந்து பேர் கொண்ட ஒரு கொள்ளை கோஷ்டியை போலீசார் பிடித்துள்ளனர். வெளிநாட்டு பொருட்களை வாங்க வருபவர்கள் போல் பகலில் வீட்டுக்குள் வந்து பார்த்துவிட்டு இரவில் கொள்ளை அடிப்பார்களாம்.

இந்தக் கும்பலிடமிருந்து ஏராளமான டேப்ரிக்கார்டர்கள் சுவர் கடிகாரங்கள் சேலைகள் அடங்கிய கைப்பற்றப்பட்டுள்ளன.

Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34 Nelson Manickam Road MADRAS-29

# கிரிக்கெட்டில் இந்தியா அபார வெற்றி: ராஜீவ்- புரட்சிதலைவர் வாழ்த்து

லண்டன், ஜூன் 11— இங்கிலாந்துடன் நடந்த முதலாவது கிரிக்கெட் டெஸ்டில் இந்தியா வெற்றி பெற்றது. வெற்றி பெற்ற இந்திய அணிக்கு பிரதமர்ராஜீவ், முதல்வர் புரட்சித் தலைவர் ஆகியோர் வாழ்த்துச் செய்தி அனுப்பியுள்ளனர்.

இந்திய- இங்கிலாந்து அணிகளுக்கு இடையே யான முதலாவது கிரிக்கெட் டெஸ்ட் லண்டன் லார்ட்ஸ் மைதானத்தில் நடைபெற்றது.

இந்த டெஸ்ட் மாட்சில், இந்தியா வெற்றி பெற்று சாதனை நிகழ்த்தியுள்ளது.

இங்கிலாந்துக்கு எதிராக லார்ட்ஸ் மைதானத்தில் இந்தியா பெற்றுள்ள முதல் வெற்றி இது வாகும்.

கபில்தேவ் காப்டன் ஆக இருந்து இந்திய அணி வெற்றி பெற்றிருப்பதும் இதுவே முதல முறையாகும்.

கபில்தேவ் இதுவரை 21 டெஸ்ட் பந்தயங்களில் காப்டனாக இருந்துள்ளார்.

ஸ்கோர்விவரம் வருமாறு:

இங்கிலாந்து முதல் இன்னிங்ஸ், 294 ரன்கள் 2-வது இன்னிங்ஸ், 180 ரன்கள். இந்தியா முதல இன்னிங்ஸ் 341 ரன்கள் 2-வது இன்னிங்ஸ் 5 விக்கெட் இழப்பிற்கு 136 ரன்கள்

வெற்றிக்குத்தேவையான 134 ரன்களை எடுக்க வேண்டிய நிலையில் 2வது இன்னிங்ஸ் ஆட்டத்தைத் தொடங்கிய இந்திய அணியில் துவக்கத்திலேயே ரன் எதுவும் எடுக்காத நிலையில் ஸ்ரீகாந்த் அவுட் ஆனார்

கவாஸ்கர் 22ரன்கள் எடுத்திருந்த நிலையில் அவுட் ஆனார்.

மொகிந்தர் 8 ரன்களில் அவுட் ஆனார்.

அதன்பிறகுவெங்சர்க்கார் 28 நிமிடத்தில் 27 ரன்களை எடுத்தார். 33 ரன்களில் அவர் அவுட்ஆனார்.

அசாருதீன் 14 ரன்கள் கள் எடுத்திருந்த நிலையில் அவுட் ஆனார்.

ரவிசாஸ்திரியும், கபில் தேவும் பின்னர் விளையாடினர். இருவரும் பந்துகளை அடித்து ஆடினர்.

ரவிசாஸ்திரி எடுத்த 20 ரன்களில் 3 பவுண்டரிகள் அடங்கும்.

கபில்தேவ் ஆட்டம் பல்லாயிரக்கணக்கான ரசிகர்களுக்கு பெரும் உற்சாகத்தை அளித்தது.

கபில்தேவ் எடுத்த 23 ரன்களில் 4 பவுண்டரிகளும் ஒரு சிக்சரும் அடங்கும்.

கபில்தேவ் வெற்றிக்குத் தேவையானரன்னைஎடுக்க கடைசி பந்தை சிக்சராக அடித்தார்.

## பிரதமர் வாழ்த்து

இந்திய அணி வெற்றி பெற்ற சில நிமிடங்களுக்குள்பிரதமர் ராஜீவ்இந்திய அணிக்கு வாழ்த்துத்தெரிவித்து செய்தி அனுப்பினார்.

## புரட்சித் தலைவர் வாழ்த்து

லார்ட்சில்வெற்றிபெற்ற இந்திய கிரிக்கெட் அணிக்கும், காப்டன் கபில்தேவுக்கும் முதல்வர் புரட்சித் தலைவர் பாராட்டுத் தெரிவித்துள்ளார்.

முதல்வர் புரட்சித் தலைவர் அனுப்பியுள்ள செய்தியில் குறிப்பிட்டுள்ளதாவது:-

இந்திய கிரிக்கெட் அணி பெற்றுள்ள வெற்றி இந்தியாவிற்கே பெருமிதம் தரும் வெற்றியாகும்.

நெடுநாட்களுக்குப் பின் கிடைத்துள்ள இந்தவெற்றி இன்னும் பல வெற்றிகளை பெறுவதற்குஇந்திய அணியினரை உற்சாகப்படுத்தும்என நம்புகிறேன்

தமிழகத்தின் சார்பிலும் என் சார்பிலும் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் தெரிவித்துள்ளார்

## கோவர் நீக்கம்

இங்கிலாந்து தோல்வியை அடுத்து இங்கிலாந்து அணி காப்டனாக இருந்த டேவிட் கோவர் காப்டன் பதவியில் இருந்து நீக்கப்பட்டார்.

அடுத்த இரு டெஸ்ட்களிலும் மைக்காட்டிங் காப்டனாக இருப்பார்.

# பஞ்சாபில் போலீஸ் தீவிரவாதிகள் பயங்கர மோதல்

சண்டிகர். ஜூன் 11- பஞ்சாபில் போலீசாருக்கும். தீவிரவாதிகளுக்கும் கடும் மோதல்நடந்தது. பஞ்சாபில் சீக்கிய தீவிரவாதிகள் மீண்டும் அட்டூழியம் செய்யத் துவங்கியுள்ளனர், இவர்களை ஒடுக்க போலீசார் தீவிர முயற்சிகளை மேற்கொண்டுள்ளனர்.

பஞ்சாபில் ஓரிடத்தில் தீவிரவாதிகள் மறைந்திருப்பதாக போலீசுக்கு தகவல்வந்ததுஇதையடுத்து அங்கு போலீசார் விரைந்தனர். போலீசார் வருவதைக் கண்டு பதுங்கியிருந்த தீவிரவாதிகள் துப்பாக்கியால் சுட்டனர். போலீசாரும் திரும்ப சுட்டனர். இச்சம்பவத்தின் போது இருதீவிரவாதிகளை போலீசார் பிடித்தனர். நால்வர் தப்பி விட்டனர்.

லூதியானா மாவட்டத்தில இரு தீவிரவாதிகள ஒருவர் மீது நடத்திய துப்பாக்கி சூட்டில் அவர் இறந்தார்.

தீவிரவாதிகளை ஒடுக்க போலீசார் கடும் நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளனர்.

# கூவம் ஆறும் நகர மக்களும்: சென்னையில் கருத்தரங்கு

சென்னை ஜூன் 11— நாட்டு மக்களின வாழ்வுக்கு வழிகாட்டியாக அமைந்திருப்பது அந்த நாட்டின் நதிகளே ஆகும்.

அத்தகைய வாய்ப்பை பெற்றிருந்தும் சென்னை நகரில் ஓடிக் கொண்டிருக்கும் கூவம் ஆறு நகரத்தின் கழிவுப் பொருள்களை ஏற்றிச் செல்லும் ஊர்தியாகவே இருந்து வருகிறது.

இந்த ஆற்றை சுத்தப்படுத்தி மக்களின் நல் வாழ்க்கைக்கு உதவகரமாக மாற்றுவது பற்றிய கருத்தரங்கு இம்மாதம் 14-ம் தேதி சென்னை சேப்பாக்கம் ஆதம் சாலையில் உள்ள அகில இந்திய பொறியாளர் சங்கக் கட்டிடத்தில் நடைபெறுகிறது. பிரபல பொறியாளர்கள். அறிஞர்கள, பேராசிரியர்கள் பலரும் கலந்து கொண்டு கருததுரை வழங்குகிறார்கள்.

## துணைத்தலைவர் போட்டியில் கழகம் வெற்றி

ஆத்தூர், ஜூன் 11— ஆத்தூர் ஊராட்சி ஒன்றிய கூட்டம் கோட்ட வளர்ச்சி அலுவலர் தலைமையில் ஒன்றியதலைவர் ராமசாமி முன்னிலையில் நடைபெற்றது

அப்போது துணைத் தலைவர் தேர்தல் போட்டிக்கு சிவசரகு ஊராட்சித் தலைவர் வேல்முருகன் மட்டும் மனு செய்திருந்தார் இதையொட்டி அவர் ஆத்தூர் ஒன்றிய துணைத் தலைவராக போட்டியின்றி தேர்ந்தெடுக்கப் பட்டார்.

# இந்தியர் எழுதிய நூலுக்கு அமெரிக்காவில் கடும் கிராக்கி

வாஷிங்டன், ஜூன் 11- இந்தியர் ஒருவர் எழுதிய நூல் அமெரிக்காவில் பரபரப்பாக விற்பனையாகிறது.

"புதுமை, அருமை, இனிமை" என்று அந்த நாவலை 'நியூஸ்வீக்' பத்திரிகை பாராட்டியது அந்த நாவலின் பெயர் 'கோல்டன் கேட்' (பொன்வாயில்) சான்பிரான்சிஸ்கோ நகரின் பின்னணியில் எழுதப்பட்டது; அதனை எழுதியவர் விக்ரம் சேத் எனனும் 34 வயது இந்தியர்; கல்கத்தாவில் பிறந்தவர்.

## முதலாவது நாவல்

இது அவரது முதலாவது நாவல். அமெரிக்காவில் இந்த நாவல் வெளியிடப்பட்ட உடனேயே பரபரப்பாக விற்பனை ஆயிற்று

இந்த நாவலில் புதுமை என்ன வென்றால் - இது முழுக்க முழுக்க கவிதை வடிவிலேயே எழுதப்பட்டிருக்கிறது உற்சாகம் கொப்பளிக்கும்கவிதைஇது இந்த நாவலின் முன்னுரை பொருளடக்கம் ஆசிரியரை பற்றிய குறிப்பு ஆகிய அனைத்துமே கவிதை வடிவில் உள்ளன மொத்தம் 307 பக்கங்கள் கொண்ட இந்தக் கதை நாவலை ராண்டம்ஹவுஸ் பதிப்பகத்தார் வெளியிட்டிருக்கிறார்கள்

இந்நாவலின் கதாநாயகன் ஜான் ஓர் எஞ்ஜினீயர் அவனது பழைய காதலி ஜேன் புதிய சிநேகிதி லிஸ் டோரதி ஆகியோரைச் சுற்றி இக்கதை பின்னப்பட்டுள்ளது பத்திரிகை விளம்பரம் ஒன்றின் மூலமாக லிஸ் ஸுடன் தொடர்பு கொள்கிறான் ஜான்; அதனைத் தொடர்ந்து இந்த முக்கோணக்காதல் கதையில் பல திருப்பங்கள் ஏற்படுகின்றன.

"உரை நடையில் அமைந்திருந்தால் இந்தக் கதை எடுபட்டிருக்காது; கவிதை என்பதினாலே, இது அலை அலையாக உற்சாக உணர்வுகளை எழுப்புகிறது' என்று நியூஸ்வீக் பத்திரிகையில் விமாசகர் டேவிட் லெமான் குறிப்பிட்டுள்ளார்

'கோல்டன் கேட் நாவல் அபாரமாக இருக்கிறது: இது ஒரு புதுமையான படைப்பு" என்று 'நியூ ரிபப்ளிக்' பத்திரிகை புகழ்ந்துரைத்துள்ளது

## சீனாவின் பொருளாதாரம்

இந்த நாவலாசிரியர் விக்ரம் சேத் ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகத்தில் படித்தவர் இப்போது கலிபோர்னியாவிலுள்ள ஸ்டான்போர்ட் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சிமாணவராக உள்ளார் "சீனாவின் பொருளாதாரமும் மக்கள் தொகையும்" என்பதுபற்றி ஆய்வு நடத்தி வருகிறார் திபேத்திய பயணக்கதை ஒன்றையும் இவர் எழுதி வெளியிட்டிருக்கிறார்.

## சென்னை மாநகராட்சி ஒப்ப அறிவிப்பு

மா. அ. (தொ) ப. மா, எண். 395/85

பொருள்: ஒப்பம் - நவீன மறுகலவை தொழில் நுட்பத்தை பயன்படுத்தி பேருந்துகள் செல்லும சாலைகளைப் பழுது பார்த்தல் ஒப்பங்கள் கோரப்படுதல் சம்மந்தமாக.

மூடி அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பங்கள் நவீன மறுகலவை தொழில் நுட்பத்தை பயன்படுத்தி பேருந்து செல்லும் சாலைகளை பழுது பார்க்கும் பணிகளுக்காக சென்னை மாநகராட்சியில் வகுப்பு 1ல் பதிவு பெற்ற ஒப்பந்தக்காரர்களிடமிருந்து 9-7-1986 அன்று பிற்பகல் 3 மணி வரைபொறியாளர், சென்னை மாநகராட்சி அவர்களால் பெறறுக் கொள்ளப்படும். உறையின் மீது பணியின் பெயரைக் குறிப்பிட வேண்டும். ஒப்ப படிவத்துடன் பணியின் எதிரே குறிப்பிடப்பட்டுள்ள ஒப்ப வைப்புத் தொகைக்கான பணத்தை செலுத்தியதற்கான சென்னைமாநகராட்சியின் கருவூல செலுத்துச் சீட்டையோ அல்லது அரசுடைமையாக்கப்பட்ட அல்லது அங்கீகரிக்கப்பட்ட வங்கிகளில் ஆணையாளர் சென்னை மாநகராட்சி அவர்களின் பதிவுப் பெயரில் பெறப்பெற்ற பண வரைவோ இணைத்தல் வேண்டும். மேற்குறிப்பிட்டவை தவிர மற்றவைகள் ஒப்ப வைப்புத் தொகை இணைக்கப்படாத ஒப்பங்கள் கண்டிப்பாக நிராகரிக்கப்படும்.

ஒப்பந்தக்காரர்கள் தாங்களே சொந்தமாக நவீன மறுகலவை தொழில்நுட்ப இயந்திரமும், அதற்கு தேவையான வாகனங்கள் இயந்திர சாதனங்களையும் பெற்றிருத்தல் வேண்டும், சென்னை மாநகராட்சியால் இக்கருவிகளை தர இயலாது, மேற்கூறியஇயந்திரத்தையும், இயந்திரசாதனங்களையும் சொந்தமாக பெற்றிருப்பதற்கு தேவையான பத்திர நகலை ஒப்பந்தத்துடன் இணைத்தல் வேண்டும். நகல் இணைக்கப்படாத ஒப்பங்கள் பரிசீலனைக்கு ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது மூலப் பத்திரங்களை மாநகராட்சிக்கு தேவையான போது காண்பித்தல் வேண்டும்,

பணியின் பெயர்: நவீன மறுகலவை தொழில்நுட்ப இயந்திரத்தைபயன்படுத்தி சென்னை மாநகராட்சியின் பேருந்து செல்லும் சாலைகளை டி. ஜி ஏ. சி கலவையைப்பயன்படுத்திபுதுப்பித்தல் பணி, இந்த சாலைகளில் தற்போதுள்ள தார் கலவை மேற்பரப்பை முன்கூட்டித் தீர்மானித்த கனத்திற்கு உஷ்ண முறையைப்பயன்படுத்தி எடுத்து ஆய்வு செய்து தேவைப்படும், மூலப்பொருள்களை உரிய அளவு சேர்த்து தரமான டி ஜி.ஏ.சி.கலவையை மேற்குறிப்பிட்ட நவீன இயந்திரத்தின்மூலம் புதிய தார் கலவை மேற்பரப்பை 50 மில்லி மீட்டர் கனத்திற்கு போடவேண்டும்.

இந்த தார் மேற்பரப்பு கலவையை முறையாக பரப்புதல் கெட்டிப்படுத்துதல் ஆகிய பணிகள் நவீன இயந்திரத்தின மூலம் செய்ய வேண்டும். சக்தி வாய்ந்த உருளைகளின் மூலம் கெட்டிப்படுத்த வேண்டும். இறுதியாக கெட்டிப் படுத்திய பிறகு புதிய தார் கலவையின் கனம் 50 மில்லி மீட்டருக்கு குறையாமல் இருக்க வேண்டும்

பணியின் தோராய ஒப்ப மதிப்பு: ரூபாய் 185லட்சம்

வைப்புத் தொகை: ரூபாய் 1.85 லட்சம்

ஒப்ப நமூனா விலை: ரூபாய் 2210/- (விற்பனை வரி 10 சதவீதம் 5சதவீதம் உட்பட)

ஒப்புதல் அளிக்கப்பட்ட ஒப்பந்தக்காரர் முன்னதாக சென்னை மாநகராட்சியில் ஒப்பந்தக்காரராக பதிவு பெறவில்லையெனில் மேற்கூறிய வேலைக்கான அலுவலக உத்தரவு பெற்ற பின் உடனடியாக பதிவு செய்ய வேண்டும்.

ஒப்ப படிவங்கள் நிபந்தனைகளை சென்னை மாநகராட்சி, சென்னை 600 003, விசாரணை அலுவலகத்தில் பணியின் எதிரே குறிப்பிடப்பட்டுள்ள ஒப்ப நமூனாவின் விலையைச் செலுத்தி 23-6-86 முதல் பெற்றுக் கொள்ளலாம்.

ஒப்ப படிவங்கள விற்பனை 7-7-1986-ம் தேதிபிற்பகல்3-00மணிக்கு நிறுத்தப்படும்

பி. மு. சுப்ரமணியம்
தலைமை பொறியாளர்

## சினிமா அதிபர் தாயாரிடம் ரூ. 16 ஆயிரம் கொள்ளை

சென்னை, ஜூன் 11— திரைப்பட தயாரிப்பாளர் தமிழ்மணியின் தாயார் லட்சுமி அம்மாள் இவரது வீடு தியாகராய நகரில் இருக்கிறது.

மறைந்த உறவினர் ஒருவரின் இறுதிச்சடங்குக்காக லட்சுமி அம்மாள் ஏழு கிணறு பகுதிக்கு சென்றுவிட்டு வீட்டுக்குத் திரும்ப அவர்ஸ்டான்லி மருத்துவமனை அருகே வந்த போது முண்டாசுகட்டிய பேர்வழி அவரை வழி மறித்துகத்தியைக் காட்டி மிரட்டியதாகக் கூறப்படுகிறது.

10 சவரன் எடையுள்ள தங்கச் சங்கிலியைபறித்துக் கொண்டு அவன் சைக்கிளில் ஏறி தப்பி ஓடினான

இது பற்றிய புகாரைத் தொடர்ந்து ஏழு கிணறு போலீசார் வழக்குப் பதிவு செய்து திருடனை வலைவீசி தேடிவருகிறார்கள்.

# ஜியாவுக்கு பூட்டோ மகள் பெனாசிர் கடும் எச்சரிக்கை

ராவல்பிண்டி. ஜூன் 11- என்னை கைதுசெய்தால் போராட்டம் வெடிக்கும் என்று பாகிஸ்தான் அதிபர் ஜியாவுக்கு பெனாசிர் எச்சரிக்கை விடுத்துள்ளார்

பாகிஸ்தானில் ஜியாவின் ராணுவ ஆட்சியை எதிர்க்கும் பூட்டோவின் மகள் பெனாசிர் புதிய தேர்தல் நடத்தும்படி வற்புறுத்தி வருகிறார்.

## மக்களிடம் பிரசசாரம்

இதற்காக பாகிஸ்தான் முழுவதும் சுற்றுப்பயணம் செய்து பொதுக் கூட்டங்களில் பேசி வருகிறார். அவருடைய சொந்த ஊரான லர்கானாவில் நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:-

ஜியாவின் ஆட்சியை அகற்றும்படி மக்களிடம் பிரச்சாரம் நடத்தி வருகிறோம். ஊர்வலங்கள் நடத்துகிறோம். ரம்சான் நோன்பு காலத்தில் இது நிறுத்திவைக்கபட்டிருந்தது இனி மீண்டும் பிரச்சாரம் தொடங்கும் ஜூலை 5ந் தேதி மாவட்ட தலை நகரங்களில் பிரம்மாண்ட ஊர்வலம் நடத்தப்படும்.

ஜியா அரசாங்கம் என்னை கைது செய்தால் பாகிஸ்தான் முழுவதும் போராட்டம் வெடிக்கும் அது என்ன மாதிரி போராட்டமாக இருக்கும் என்பதை இப்போது சொல்லமுடியாது

இவ்வாறு பெனாசிர் கூறினார்

## டாக்டர் சமரசம் நிகழ்ச்சிகள்

ஜூன் 11-ந் தேதிகாவேரிப்பட்டணம்பாப்பாரப்பட்டி 12கிருஷ்ணகிரிசாந்தாபுரம் 15 மோர்ணஹள்ளி கொத்தளம்.

## கோவையில் தானியங்கி பால் நிரப்பும் இயந்திரம்

கோவை, ஜூன் 11— கோவை மாவட்ட கூட்டுறவு பால் உற்பத்தியாளர் ஒன்றியம் தற்போது வாடிக்கையாளர்களுக்கு பாலிதீன் பைகளிலும் பல்வேறு நிறுவனங்களுக்கு கேன்களிலும நாள் ஒன்றுக்கு 52,000 லிட்டர் பாலை விநியோகம்செய்து வருகிறது. தற்பொழுது மணிக்கு 10,000பாக்கெட்டுகள் அடிக்கும் திறன் கொண்ட தானியங்கி மின் அணு இயந்திரங்கள் இயங்கிக்கொண்டுஇருக்கின்றன

கடந்த காலத்தில் சில சமயங்களில் இயந்திரங்கள் பழுதுபட்ட நேரத்தில் பாலிதீன் பைகளில் பாலை காலதாமதமாக மக்களுக்கு வழங்க நேரிட்டது. சில சமயங்களில் பால் பைகளில் சில பூத்துகளில் வழங்க இயலாமல் கேன்களிலேயே வழங்க நேரிட்டது.

இதனை தவிர்க்கவும் மேலும் கூடுதலாக 10,000 லிட்டர் பாலை பாலிதீன் பைகளில் விற்பனை செய்யவும் புதிய பால் நிரப்பும் தானியங்கி மின் அணு இயந்திரம் ஒன்று ஒன்றியத்தின் பெருந்தலைவர் எம். நடராசனால் இயக்கி வைக்கப்பட்டது, இந்த இயந்திரத்தின் மதிப்பு ரூபாய் 4 லட்சம் ஆகும்.

# காதல் ஜோடி விஷம் குடித்து தற்கொலை

திருப்பதி, ஜூன 11- திருப்பதியில் காதல் ஜோடி விஷம் குடித்து தற்கொலை செய்து கொண்டது.

சென்னை தேனாம் பேட்டையைச் சேர்ந்தவர் ஏ. ராஜன் (வயது 30)

இவர் ராஜேஸ்வரி என்ற 23 வயது பெண்ணை காதலித்தார். காதலுக்கு பெற்றோர்கள் எதிர்ப்புத் தெரிவித்ததாக கூறப்படுகிறது.

இதனால் காதல் ஜோடி விரக்தி அடைந்தது. ராஜனும்- ராஜேஸ்வரியும் திருப்பதிக்குச் சென்றார்கள்.

திருப்பதி கோவிலுக்கு பின்புறம் உள்ள ஒரு தனியார் ஓட்டலில் அறை எடுத்துத் தங்கினர்.

அங்கு இருவரும் விஷம் குடித்து தற்கொலை செய்து கொண்டனர்.

மறுநாள் இதுபற்றி போலீசார் புலன் விசாரணை நடத்தினர்.

## தமிழில் கடிதம்

ராஜன் தமிழில் ஒரு கடிதம் எழுதி வைத்துள்ளார் வாழ்க்கையில் விரக்தி அடைந்து தற்கொலை செய்து கொள்வதாக அதில் எழுதி உள்ளார்.

தனது முகவரி 130 எல்டாம்ஸ் ரோடு தேனாம் பேட்டை சென்னை-18 என்று ராஜன் குறிப்பிட்டுள்ளார்

## பல்லவன் சீனிவாசன் கலை நிகழ்ச்சி

11 31-வது வட்டம்
12 34-வது வட்டம்

முகவரி
பல்லவன் சீனிவாசன்
12-வது தெரு
கோபாலபுரம்
பெரம்பூர் சென்னை-82